اَلْحَمْدُ لِلّٰهِ رِبِّ الْعَالَمِيْنَ وَالصَّلاةُ وَالسَّلامُ عَلى سَيِّدَنَا مُحَمَّدٍ وَعَلى آلِهِ وِصَحْبِهِ اَجْمَعِيْنَ

புகழ் அனைத்தும் அகிலங்களைப் படைத்துப் பாதுகாக்கும் அல்லாஹ்வுக்கே! சாந்தியும் சமாதானமும் நமது தலைவர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார், தோழர்கள் அனைவர் மீதும் உண்டாகட்டுமாக!

| الْعَالَمِيْنَ | رِبِّ | لِلّٰهِ | اَلْحَمْدُ |
|---|---|---|---|
| அகிலங்கள் | படைத்துப் பாதுகாப்பவன் | அல்லாஹ்வுக்கே | புகழ் அனைத்தும் |

| عَلى سَيِّدَنَا | وَالسَّلامُ | الصَّلاةُ | وَ |
|---|---|---|---|
| நமது தலைவர் மீது | சமாதானமும் | சாந்தி | இன்னும் |

| اَجْمَعِيْنَ | وَصَحْبِهِ | وَعَلى آلِهِ | مُحَمَّدٍ |
|---|---|---|---|
| அனைவர் | அவர்களின் தோழர்கள் மீதும் | அவர்களின் குடும்பத்தார் மீதும் | முஹம்மத் (ஸல்) |

தொழுகை இஸ்லாமியக் கடமைகளில் மிக முக்கியத்துவம் வாய்ந்த இரண்டாவது கடமையாகும்.

.... فَأَقِيمُوا الصَّلاةَ إِنَّ الصَّلاةَ كَانَتْ عَلَى الْمُؤْمِنِينَ كِتَابًا مَوْقُوتًا

: தொழுகையை நிலை நாட்டுங்கள் நிச்சயமாக நம்பிக்கை கொண்டோர் மீது தொழுகை நேரம் குறிக்கப்பட்ட கடமையாகவுள்ளது. (அல்குர்ஆன் 4:103).

| كَانَتْ | الصَّلاةَ | إِنَّ | فَأَقِيمُوا الصَّلاةَ |
|---|---|---|---|
| ஆகிவிட்டது | தொழுகை | நிச்சயமாக | தொழுகையை நிலை நாட்டுங்கள் |

| مَوْقُوتًا | كِتَابًا | عَلَى الْمُؤْمِنِينَ |
|---|---|---|
| நேரம் குறிக்கப்பட்ட | கடமை | நம்பிக்கை கொண்டோர் மீது |

حَافِظُوا عَلَى الصَّلَوَاتِ وَالصَّلَاةِ الْوُسْطَى وَقُومُوا لِلَّهِ قَانِتِينَ (٢:٢٣٨)

தொழுகைகளையும், நடுத் தொழுகையையும் பேணிக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வுக் குக் கட்டுப்பட்டு நில்லுங்கள்! (அல்குர்ஆன் 2 : 238) 2:238

| عَلَى الصَّلَوَاتِ | لِلَّهِ | قُومُوا | حَافِظُوا |
|---|---|---|---|
| தொழுகைகள் மீது | அல்லாஹ்வுக்கு | நில்லுங்கள் | பேணிக் கொள்ளுங்கள் |

| قَانِتِينَ | الصَّلَاةِ الْوُسْطَى | وَ |
|---|---|---|

| | | |
|---|---|---|
| கட்டுப்பட்டு | நடுத் தொழுகை | இன்னும் |

اتْلُ مَا أُوحِيَ إِلَيْكَ مِنَ الْكِتَابِ وَأَقِمِ الصَّلَاةَ إِنَّ الصَّلَاةَ تَنْهَى عَنِ الْفَحْشَاءِ وَالْمُنْكَرِ وَلَذِكْرُ اللَّهِ أَكْبَرُ وَاللَّهُ يَعْلَمُ مَا تَصْنَعُونَ

: (முஹம்மதே!) வேதத்திலிருந்து உமக்கு அறிவிக்கப்பட்டதைக் கூறுவீராக! தொழுகையை நிலை நாட்டுவீராக! நிச்சயமாக தொழுகை வெட்கக்கேடான காரியங்களை விட்டும், தீமையை விட்டும் தடுக்கும். அல்லாஹ்வை நினைப்பதே மிகப் பெரியது. மேலும் நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் அறிவான். (அல்குர்ஆன் 29:45)

| وَأَقِمِ | مِنَ الْكِتَابِ | إِلَيْكَ | مَا أُوحِيَ | اتْلُ |
|---|---|---|---|---|
| இன்னும் நிலை நாட்டு | வேதத்திலிருந்து | உமக்கு | அறிவிக்கப்பட்டதை | கூறு |

| عَنِ الْفَحْشَاءِ | تَنْهَى | إِنَّ الصَّلَاةَ | الصَّلَاةَ |
|---|---|---|---|
| வெட்கக்கேடை விட்டும் | தடுக்கும் | நிச்சயமாக தொழுகை | தொழுகை |

| أَكْبَرُ | لَذِكْرُ اللَّهِ | وَ | وَالْمُنْكَرِ |
|---|---|---|---|
| மிகப் பெரியது | அல்லாஹ்வை நினைப்பது | இன்னும் | தீமையையும் |

| مَا تَصْنَعُونَ | وَاللَّهُ يَعْلَمُ |
|---|---|
| நீங்கள் செய்பவற்றை | மேலும் அல்லாஹ் அறிவான் |

عَنْ جَابِرٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم بَيْنَ الْعَبْدِ وَبَيْنَ الْكُفْرِ تَرْكُ الصَّلَاةِ ٤٦٨٠،

: இறை மறுப்புக்கும் (இஸ்லாமிய) அடியானுக்கும் இடையில் உள்ள வேறுபாடு தொழுகையை விடுவதாகும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி) நூல்: முஸ்லிம் 4680

| بَيْنَ | رَسُولُ اللَّهِ | قَالَ | عَنْ جَابِرٍ |
|---|---|---|---|
| இடையில் | அல்லாஹ்வின் தூதர் | கூறினார் | ஜாபிர் மூலம் |

| تَرْكُ الصَّلَاةِ | وَبَيْنَ الْكُفْرِ | الْعَبْدِ |
|---|---|---|
| தொழுகையை விடுவது | இறை மறுப்புக்கும் | அடியான் |

அல்லாஹ் விரும்பும் தொழுகை:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَقْرَبُوا الصَّلَاةَ وَأَنْتُمْ سُكَارَى حَتَّى تَعْلَمُوا مَا تَقُولُونَ

: நம்பிக்கையாளர்களே! நீங்கள் போதையுடையவர்களாக இருக்கும் நிலையில் தொழுகைக்கு நெருங்காதீர்கள், நீங்கள் என்ன கூறுகிறீர்கள் என்று தெரியும் வரை...........4:43.

| يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا | لَا تَقْرَبُوا الصَّلَاةَ | وَأَنْتُمْ | سُكَارَى |
|---|---|---|---|
| நம்பிக்கையாளர்களே! | தொழுகைக்கு நெருங்காதீர்கள் | நீங்கள் | போதையுடையவர்கள் |

| حَتَّى تَعْلَمُوا | مَا تَقُولُونَ |
|---|---|
| தெரியும் வரை | நீங்கள் கூறுவது |

தொழுகைக்குச் செல்லுமுன் அத்தொழுகையில் என்ன கூறுகிறோம் என்று தெரிந்து தொழ வேண்டு மென்பதையே இவ்வசனம் வலியுறுத்துகிறது.

عَنْ مَالِكٍ ........وَصَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي ........بخاري ٦٣١

:..........என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள்! என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.......... அறிவிப்பவர்: மாலிக் (ரலி), புகாரி 631.

| عَنْ مَالِكٍ | صَلُّوا | كَمَا | رَأَيْتُمُونِي | أُصَلِّي |
|---|---|---|---|---|
| மாலிக் (ரலி) மூலம் | நீங்கள் தொழுங்கள் | போல | என்னை நீங்கள் கண்டது | நான் தொழுவேன் |

குறிப்பு: ஹதீஸ்களின் துவக்கத்தில் வரக்கூடிய عَنْ என்ற வார்த்தைக்கு மூலம் அறிவிக்கப்படுகிறது என்று பொருள் கொள்ள வேண்டும், அறிவிக்கப்படுகிறது என்ற பொருள் கொண்ட வார்த்தை போக்கப்பட்டே இருக்கும். எனவே عَنْ مَالِكٍ மாலிக் என்றால் மாலிக் மூலம் அறிவிக்கப்படுகிறது என்றுபொருள் கொள்ள வேண்டும்.

عَنْ عَلِيٍّ رضى الله عنه قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم مِفْتَاحُ الصَّلَاةِ الطُّهُورُ وَتَحْرِيمُهَا التَّكْبِيرُ وَتَحْلِيلُهَا التَّسْلِيمُ ٦١. ابو داود

"தொழுகயின் திறவு (உளூ எனும்) தூய்மையாகும். (உலகத் தொடர்புகளை) தடை செய்வது தக்பீர் கூறுவதாகும். அதிலிருந்து விடுபடுவது அஸ்ஸலாமு அலைக்கும் என்று கூறுவதாகும்" என்று நபி (ஸல்) (அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அலி ரலி), நூல்: அபூதாவூத் 61.

| عَنْ عَلِيٍّ | قَالَ | رَسُولُ اللَّهِ | مِفْتَاحُ |
|---|---|---|---|
| அலி (ரலி) மூலம் | கூறினார் | அல்லாஹ்வின் தூதர் | திறவுகோல் |

| الصَّلَاةِ | الطُّهُورُ | وَتَحْرِيمُهَا | التَّكْبِيرُ |
|---|---|---|---|
| தொழுகயின் | தூய்மை | தடை செய்வது. | தக்பீர் கூறுவது |

| التَّسْلِيمُ | وَتَحْلِيلُهَا |
|---|---|
| அஸ்ஸலாமு அலைக்கும் என்று கூறுவது | அதிலிருந்து விடுபடுவது |

தொழுகை என்றால் என்ன? என்று தெரிந்து தொழ வேண்டும் என்ற நோக்கில் அமைக்கப்பட்டதே இந்தத் தொகுப்பு.

தொழுகை என்பதற்கு அகராதியில் துஆ -பிரார்த்தனை என்று பொருள்.
இஸ்லாத்தில் தொழுகை என்பது அல்லாஹு அக்பர் என்று தொடங்கி அஸ்ஸலாமு அலைக்கும் என்று முடிவடையும் சில கடமைகளைக் கொண்ட வணக்கம் ஆகும். இத் தொழுகை நபி (ஸல்) அவர்கள் மிஃராஜ் -விண் வெளிப்-பயணம் சென்று திரும்பிய போது ஐம்பது நேரமாகக் கடமையாக்கப்பட்டு ஐந்து நேரத் தொழுகையாகச் சுருக்கப் பட்ட கடமையாகும்.
இத்தொகுப்பின் நோக்கம் தொழுகையில் கூறுகின்ற திக்ர், துஆக்களைப் பொருள் தெரிந்து படிக்க வேண்டும் என்பதுதான் எனவே சலாத் என்ற வார்த்தைக்கு துஆ என்ற பொருள் இருப்பதால் துஆ சம்பந்தமாக வந்த சிலவற்றைப் படித்துவிட்டு தொழுகைக் குச் செல்வோம், இதில் வரும் விசயங்களை கவனமாகப் படித்து செயல்படுத்தி பிறரை யும் செயல்படுத்துங்கள்.

أُدْعُوا رَبَّكُمْ تَضَرُّعاً وَخُفْيَةً اِنَّهُ لا يُحِبُّ الْمُعْتَدِيْنَ وَلا تُفْسِدُوا فِي الْاَرْضِ بَعْدَ
إِصْلاَحِهَا أُدْعُوهُ خَوْفَا وَطَمَعًا اِنَّ رَحْمَةَ اللّهِ قَرِيْبٌ مِّنَ الْمُحْسِنِيْنَ

: உங்களுடைய இறைவனிடம் பணிவாகவும் அந்தரங்கமாகவும் பிரார்த்தியுங்கள், வரம் புமீறுபவர்களை அவன் நேசிப்பதில்லை. பூமியில் சீர் திருத்தம் செய்த பின்னர் அதில் குழப்பம் செய்யாதீர்கள். பயத்துடனும், ஆசையுடனும் அவனிடம் பிரார்த்தியுங்கள் நிச்ச யமாக அல்லாஹ்வின் அருள் நல்லோருக்கு சமீபமாக இருக்கிறது. 7:55,56.

| خُفْيَةً | وَ | تَضَرُّعًا | رَبَّكُمْ | ادْعُواْ |
|---|---|---|---|---|
| அந்தரங்கம் | இன்னும் | பணிவு | உங்களுடைய இறைவன் | பிரார்த்தியுங்கள் |

| لا تُفْسِدُوا | الْمُعْتَدِينَ | لاَ يُحِبُّ | إِنَّهُ |
|---|---|---|---|
| குழப்பம் செய்யாதீர்கள் | வரம்பு மீறுபவர்கள் | அவன் நேசிக்கமாட்டான் | நிச்சயமாக அவன் |

| طَمَعًا | خَوْفًا | أُدْعُوهُ | إِصْلاَحِ | بَعْدَ | فِي الأَرْضِ |
|---|---|---|---|---|---|
| ஆசை | பயம் | அவனிடம் பிரார்த்தியுங்கள் | திருத்தம் | பின்னர் | பூமியில் |

| الْمُحْسِنِينَ | قَرِيبٌ | رَحْمَتَ اللّهِ | إِنَّ |
|---|---|---|---|
| நல்லோர் | சமீபம் | அல்லாஹ்வின் அருள் | நிச்சயமாக |

كُمْ هُ ها ஆகிய இம்மூன்றும் ضَمِيْرٌ (பிரதிப் பெயர்கள்) ஆகும், இவை தனித்து வராது, ஆயத்திலுள்ளது போல اِسْمُ فِعْلُ حَرْفُ ஆகிய ஒன்றுடன் சேர்ந்துதான் வரும்.

உதாரணமாக: اِسْمُ உடன் ضَمِيْرٌ .

| | | |
|---|---|---|
| அவர்களுடைய இறைவன் رَبُّهُمْ (ஆண்பால் பன்மை) | அவர்கள் இருவருடைய رَبُّهُمَا இறைவன்(இது ஆண்பால், பெண்பால் இரண்டுக்கும் பொதுவானது) | அவனுடைய رَبُّهُ இறைவன் |
| அவர்களுடைய இறைவன் رَبُّهُنَّ (பெண்பால் பன்மை) | ----- ---- ------- -------- | அவளுடைய رَبُّهَا இறைவன் |
| உங்களுடைய இறைவன் رَبُّكُم (ஆண்பால் பன்மை) | உங்கள் இருவருடைய رَبُّكُمَا இறைவன் (இது ஆண்பால், பெண்பால் இரண்டுக்கும் பொதுவானது) | உன்னுடைய رَبُّكَ இறைவன் (ஆண்பால்) |
| உங்களுடைய இறைவன் رَبُّكُنَّ (பெண்பால் பன்மை) | ----- ---- ------- -------- | உன்னுடைய رَبُّكِ இறைவன் (பெண்பால்) |
| எங்களுடைய இறைவன் رَبُّنَا | ----- ---- ------- -------- | என்னுடைய رَبِّي இறைவன் |

فِعْلُ உடன் ضَمِيْرٌ

| | | |
|---|---|---|
| அவன் அவர்கள் دَعَاهُمْ பலரை அழைத்தான் (ஆண் பால்) | அவன் அவர்கள் இருவரை அழைத் دَعَاهُمَا தான் (இது ஆண்பால், பெண்பால் இரண் டுக்கும் பொதுவானது) | அவன் அவனை دَعَاهُ அழைத்தான் |
| அவன் அவர்கள் دَعَاهُنَّ பலரை அழைத்தான்(பெண் பால்) | ----- ---- ------- -------- | அவன் அவளை دَعَاهَا அழைத்தான் |
| அவன் உங்களை دَعَاكُمْ அழைத்தான் (ஆண்பால்) | அவன் உங்களை இருவரை دَعَاكُمَا அழைத்தான் (இது ஆண்பால், பெண்பால் இரண்டுக்கும் பொதுவானது) | அவன் உன்னை دَعَاكَ அழைத்தான் (ஆண்பால்) |
| அவன் உங்களை دَعَاكُنَّ அழைத்தான் (பெண்பால்) | ----- ---- ------- -------- | அவன் உன்னை دَعَاكِ அழைத்தான்(பெண்பால்) |
| அவன் எங்களை دَعَانَا அழைத்தான் | ----- ---- ------- -------- | அவன் என்னை دَعَانِي அழைத்தான் |

ضَمِيْرٌ உடன் حَرْفُ

| | | |
|---|---|---|
| நிச்சயமாக அவர்கள் பலர் ( اِنَّهُم ஆண்பால்) | நிச்சயமாக அவர்கள் இருவர் اِنَّهُمَا (இது ஆண்பால், பெண்பால் இரண்டுக்கும் பொதுவானது) | நிச்சயமாக إِنَّهُ அவன் |
| நிச்சயமாக அவர்கள் பலர் ( اِنَّهُنَّ பெண்பால் ) | ----- ---- ------- | நிச்சயமாக اِنَّهَا அவள் |
| நிச்சயமாக நீங்கள் பலர் اِنَّكُمْ | நிச்சயமாக நீங்கள் இருவர்(இது اِنَّكَمَا ஆண்பால், பெண்பால் இரண்டுக்கும் பொதுவானது) | நிச்சயமாக நீ |
| நிச்சயமாக நீங்கள் பலர்اِنَّكُنَّ | ----- ---- ------- | நிச்சயமாக اِنَّكِ நீ |
| நிச்சயமாக நாங்கள் اِنَّا،اِنَّنَا | ----- ---- ------- | اِنِّي،اِنَّنِي நிச்சயமாக நான் |

وَقَالَ رَبُّكُمُ ادْعُونِي أَسْتَجِبْ لَكُمْ إِنَّ الَّذِينَ يَسْتَكْبِرُونَ عَنْ عِبَادَتِي سَيَدْخُلُونَ جَهَنَّمَ دَاخِرِينَ

என்னிடமே நீங்கள் பிரார்த்தியுங்கள்! நான் உங்களுக்குப் பதிலிக்கிறேன் என்று உங்கள் இறைவன் கூறுகிறான், நிச்சயமாக என்னை வணங்குவதை விட்டும் பெருமை கொள்கிறார்களோ அவர்கள் இழிவடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள். 40:60.

| ادْعُونِي | رَبُّكُمُ | قال |
|---|---|---|
| என்னிடம் நீங்கள் பிரார்த்தியுங்கள் | உங்கள் இறைவன் | கூறினான் |

| الَّذِينَ يَسْتَكْبِرُونَ | إِنَّ | لَكُمْ | أَسْتَجِبْ |
|---|---|---|---|
| பெருமை கொள்கிறார்களோ அவர்கள் | நிச்சயமாக | உங்களுக்கு | நான் பதிலிக்கிறேன் |

| دَاخِرِينَ | جَهَنَّمَ | سَيَدْخُلُونَ | عِبَادَتِي | عَنْ |
|---|---|---|---|---|
| இழிவடைந்தவர்கள் | நரகம் | அவர்கள் நுழைவார்கள | என்னை வணங்குவதை | விட்டும் |

தொழுகையில் அல்லாஹு அக்பர் என்று கூறி நெஞ்சில் கையைக் கட்டியதும் கூற வேண்டியது:

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ كَانَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم إِذَا كَبَّرَ فِي الصَّلاَةِ سَكَتَ هُنَيَّةً قَبْلَ أَنْ يَقْرَأَ فَقُلْتُ يَا رَسُولَ اللَّهِ بِأَبِي أَنْتَ وَأُمِّي أَرَأَيْتَ سُكُوتَكَ بَيْنَ التَّكْبِيرِ وَالْقِرَاءَةِ مَا تَقُولُ قَالَ"

**اَللّٰهُمَّ بَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَّ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ اَللّٰهُمَّ نَقِّنِيْ مِنَ**
**اَللّٰهُمَّ اغْسِلْ خَطَايَايَ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ الْخَطَايَا كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ**

| | | | | |
|---|---|---|---|---|
| إِذَا كَبَّرَ | رَسُولُ اللَّهِ | كَانَ | قَالَ | عَنْ أَبِى هُرَيْرَةَ |
| தக்பீர் கூறினால் | அல்லாஹ்வின் தூதர் | இருந்தார் | கூறினார் | அபூஹுரைரா மூலம் |

| | | | | |
|---|---|---|---|---|
| أَنْ يَقْرَأَ | قَبْلَ | هُنَيَّةً | سَكَتَ | فِى الصَّلاَةِ |
| ஓதுவதற்கு | முன்பு | சிறிது நேரம் | மவுனமானார் | தொழுகையில் |

| | | |
|---|---|---|
| بِأَبِى | يَا رَسُولَ اللَّهِ | فَقُلْتُ |
| என் தந்தையும்(அர்ப்பணமாகட்டும்!) | இறைத்தூதரே | நான் கேட்டேன் |

| | | | |
|---|---|---|---|
| قَالَ | مَا تَقُولُ | وَ أُمِّى | أَنْتَ |
| கூறினார் | என்ன கூறுகிறீர்? | என் தாயும் | உங்களுக்கு |

**اَللّٰهُمَّ بَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَّ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ اَللّٰهُمَّ نَقِّنِيْ مِنَ**
**الْخَطَايَا كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ اَللّٰهُمَّ اغْسِلْ خَطَايَايَ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ**

| | | | | |
|---|---|---|---|---|
| بَيْنَ خَطَايَايَ | وَ | بَيْنِي | بَاعِدْ | اَللّٰهُمَّ |
| என் பாவங்களுக்கிடையே | இன்னும் | எனக்கு இடையே | தூராமாக்கு | யா அல்லாஹ்! |

| | | | | |
|---|---|---|---|---|
| نَقِّنِيْ | وَالْمَغْرِبِ | الْمَشْرِقِ | بَيْنَ | كَمَا بَاعَدْتَّ |
| என்னைத் தூய்மையாக்கு | இன்னும் மேற்கு | கிழக்கு | இடையே | நீ தூரமாக்கியது போல |

| | | | |
|---|---|---|---|
| الْأَبْيَضُ | الثَّوْبُ | كَمَا يُنَقَّى | مِنَ الْخَطَايَا |
| வெண்மையானது | ஆடை | தூய்மையாக்கப்படுத்தப்படுவது போல | தவறுகளிலிருந்து |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| وَالْبَرَدِ | وَالثَّلْجِ | بِالماء | خَطَايَايَ | اِغْسِلْ | مِنَ الدَّنَس |
| ஆலங்கட்டி | பனிக்கட்டி | தண்ணீர் கொண்டு | என் தவறுகள் | கழுகிவிடு | அழுக்கிலிருந்து |

நபி (ஸல்) அவர்கள் தொழுகைக்காக தக்பீர் கூறினால் குர்ஆன் வசனங்களை ஓதுவதற்கு முன்பு சிறிது நேரம் மவுனமாக இருப்பார்கள். 'இறைத்தூதரே! என் தாயும், தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தக்பீருக்கும், ஓதுதலுக்கும் இடையே தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என நான் கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,

'அல்லாஹும்ம பாயித் பைனீ வ பைன கதாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரி(க்) கி வல் மக்ரிப். அல்லாஹும்ம நக்கினீ மினல் கதாயா கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யலு மினத் தனஸ். அல்லாஹும் மக்ஸில் கதாயாய பில் மாயி வஸ்ஸல்ஜி வல்பரத்" என்று ஓதுவேன்' என பதிலளித்தார்கள்.

பொருள்: இறைவா! கிழக்குக்கும், மேற்குக்கும் இடையே தூரமாக்கியதைப் போல் எனக்கும், என் தவறுகளுக்குமிடையே நீ தூரமாக்குவாயாக! இறைவா! வெண்மையான ஆடையை அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்தப்படுவது போல் என்னை என் தவறுகளிலிருந்து தூய்மைப்படுத்துவாயாக! இறைவா! தண்ணீராலும், பனிக்கட்டியாலும் ஆலங் கட்டியாலும் என் தவறுகளைக் கழுவி விடுவாயாக! அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரீ 744

ஆரம்ப துஆ முடிந்ததும் ஓத வேண்டியது:

عَنْ عُبَادَةَ بْنِ الصَّامِتِ أَنَّ رَسُولَ اللهِ صلى الله عليه وسلم قَالَ لاَ صَلاَةَ لِمَنْ لَمْ يَقْرَأْ بِفَاتِحَةِ الْكِتَابِ.

சூரத்துல் ஃபாத்திஹாவை யார் ஓதவில்லையோ அவருக்குத் தொழுகையே இல்லை அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: உபாதா பின் ஸாமித் (ரலி), நூல்: புகாரி 706

| عَنْ عُبَادَةَ بْنِ الصَّامِتِ | أَنَّ | رَسُولَ اللهِ | قَالَ |
|---|---|---|---|
| உபாதா பின் ஸாமித் மூலம் | நிச்சயமாக | அல்லாஹ்வின் தூதர் | கூறினார் |

| لاَ صَلاَةَ | لِمَنْ لَمْ يَقْرَأْ | بِفَاتِحَةِ الْكِتَابِ |
|---|---|---|
| தொழுகையே இல்லை | ஓதவில்லையே அவருக்கு | சூரத்துல் ஃபாத்திஹா |

| فَاتِحَةِ | الْكِتَابِ |
|---|---|
| துவக்கம் | புத்தகம், வேதம் |

சூரத்துல் ஃபாத்திஹா

أَعُوذُ بِاللهِ من الشيطان الرجيم

விரட்டப்பட்ட ஷைத்தானின் தீங்கை விட்டும் நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகின்றேன்.

| الشيطان الرجيم | من | بِالله | أَعُوذُ |
|---|---|---|---|
| விரட்டப்பட்டவன்ஷைத்தான் | விட்டும் | அல்லாஹ்விடம் | நான் பாதுகாப்புத் தேடுகின்றேன் |

بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்பாளன், அல்லாஹ்வின் பெயரால்!

| الرَّحْمَنِ | بِسْمِ اللَّهِ |
|---|---|
| இவ்வுலகில் எல்லோருக்கும் கிருபை செய்பவன் | அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு |

| الرَّحِيمِ |
|---|
| மறுமையில் தன்னை நம்பியவருக்கு மட்டும் கிருபை செய்பவன் |

الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ(١)

**(1)** அனைத்துப்புகழும், அகிலங்கள் எல்லாவற்றையும் படைத்து வளர்த்துப் பரிபக்குவப் படுத்தும் (நாயனான) அல்லாஹ்வுக்கே ஆகும்.

| الْعَالَمِينَ | رَبِّ | لِلَّهِ | اَلْحَمْدُ |
|---|---|---|---|
| அகிலங்கள் | படைத்துப் பாதுகாப்பவன் | அல்லாஹ்வுக்கே | அனைத்துப் புகழும் |

الْحَمْدُ என்ற இந்த வார்த்தை 43 இடங்களிலும், الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ என்பது 5 இடங்களிலும், اَللهُ என்பது 2697 இடங்களிலும் رَبِّ என்பது 1041 இடங்களிலும், الْعَالَمِينَ என்பது 73 இடங்களிலும் வருகின்றன. لِلَّهِ என்பதன் அசல் لِ+اَللهِ என்றிருக்கும், لِ என்பதற்கு, "க்கு, க்கே, உரியது" என்ற பொருள்கள் உள்ளன இடத்தைக் கவனித்து பொருத்தமானதைக் கொடுக்க வேண்டும். لِ (லி) என்பது لَ (ல) என்றும் சில இடங்களில் வரும் அப்போதும் அதற்கு க்கு, க்கே, உரியது என்ற அதே பொருள் தான் அவை:

| | | |
|---|---|---|
| அவர்கள் பலருக்கு لَهُمْ | அவர்கள் இருவருக்கு لَهُمَا | அவனுக்கு, அதற்கு لَهُ |
| அவர்கள் பலருக்கு لَهُنَّ | அவர்கள் இருவருக்கு لَهُمَا | அவளுக்கு, அதற்கு لَهَا |
| உங்களுக்கு لَكُمْ | உங்கள் இருவருக்கு لَكُمَا | உனக்கு(ஆண் பால்) لَكَ |
| உங்களுக்கு لَكُنَّ | உங்கள் இருவருக்கு لَكُمَا | உனக்கு(பெண் பால்) لَكِ |
| | எங்களுக்கு لَنَا | எனக்கு لِي |

رَبِ என்பதற்கு இறைவன், படைத்தவன், பாதுகாப்பவன், வளர்ப்பவன் என்று பல பொருள் கொள்ளலாம். الْحَمْدُ لِلَّهِ எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே என்பதை لِلَّهِ الْحَمْدُ என்று கூறும்போது அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் என்று பொருள் கொள்ள வேண்டும். ஒவ்வொரு முறை நாம் குறிப்பிடும் வார்த்தைகளின் எண்ணிக்கையை மொத்த எண்ணிக்கையிலிருந்து கழித்துக் கொண்டு வந்தால் மொத்த வார்த்தைகளைத் தெரிந்து கொள்ளலாம்.

الرَّحْمَٰنِ الرَّحِيمِ (٢) **(2)** (அவன்) அளவற்ற அருளாளன் .நிகரற்ற அன்புடையோன்.

| | |
|---|---|
| நிகரற்ற அன்புடையோன் الرَّحِيمِ | அளவற்ற அருளாளன் الرَّحْمَٰنِ |

الرَّحْمَٰنِ என்பது 57 இடங்களிலும் الرَّحِيمِ என்பது 115 இடங்களிலும் வருகிறது. رَحِيمٌ என்ற இந்த வார்த்தை ஒன்பதாவது அத்தியாயத்தின் 128 வசனத்தில் முஹம்மத் (ஸல்) அவர்களுக்குக் கூறப் பட்டுள்ளது, அந்த இடத்தில் அன்புமிக்கவர் என்று கூற வேண்டும், இதை அல்லாஹ்வுக்குப் பயன்படுத் தும் போது மட்டும் தான் நிகரற்ற அன்புடையோன் என்ற பொருள் கொள்ள வேண்டும்.

مَالِكِ يَوْمِ الدِّينِ (٣) **(3)** (அவனே நியாயத்) தீர்ப்பு நாளின் அதிபதி(யும் ஆவான்).

| الدِّينِ | يَوْمِ | مَالِكِ |
|---|---|---|
| தீர்ப்பு | நாள் | அதிபதி |

مَالِكِ என்பது 3 இடங்களிலும் يَوْمِ என்பது 376 இடங்களிலும் الدِّينِ என்பது 89 இடங்களிலும் வருகிறது.

إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ (٤)

**(4)** (இறைவா!) உன்னையே நாங்கள் வணங்குகிறோம்.உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம்.

| نَسْتَعِينُ | وَ | نَعْبُدُ | إِيَّاكَ |
|---|---|---|---|
| உதவி தேடுகிறோம் | இன்னும், மேலும் | வணங்குகிறோம் | உன்னை |

إِيَّاكَ என்பது இந்த 2 இடங்களில் மட்டுமே வருகிறது, نَعْبُدُ என்பது 8 இடங்களிலும், نَسْتَعِينُ என்பது இந்த ஒரு இடத்தில் மட்டுமே வருகிறது.

اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيمَ(٥) **(5)** நீ எங்களை நேர் வழியில் நடத்துவாயாக!

| الْمُسْتَقِيمَ | الصِّرَاطَ | نَا | اهْدِ |
|---|---|---|---|
| நேரானது | வழி | எங்களை | நீ நடத்து |

اهْدِ என்பது 2 இடங்களிலும், صِرَاطَ என்பது 43 இடங்களிலும், الْمُسْتَقِيمَ என்பது 37 இடங்களிலும் வந்துள்ளது .

صِرَاطَ الَّذِينَ أَنْعَمْتَ عَلَيْهِمْ غَيْرِ الْمَغْضُوبِ عَلَيْهِمْ وَلَا الضَّالِّينَ ((٦، ٧)

**(6,7))** (அது) நீ எவர்களுக்கு அருள் புரிந்தாயோ அவ்வழி (அது) உன் கோபத்துக்கு ஆளானோர் வழியுமல்ல நெறி தவறியோர் வழியுமல்ல.

| غَيْرِ | هِمْ | عَلَي | أَنْعَمْتَ | الَّذِينَ |
|---|---|---|---|---|
| அல்லாதது, அல்லாதவன் | அவர்கள் | மீது | நீ அருள் புரிந்தாய் | சிலர் |

| الضَّالُّوْنَ، الضَّالِّيْنَ | لَا | و | هِمْ | عَلَي | الْمَغْضُوبِ |
|---|---|---|---|---|---|
| வழி தவறியவர்கள் | இல்லை | இன்னும் | அவர்கள் | மீது | கோபத்துக்குள்ளானவன் |

عَنْ حُذَيْفَةَ أَنَّهُ صَلَّى مَعَ النَّبِيِّ صلى الله عليه وسلم فَكَانَ يَقُولُ فِى رُكُوعِهِ «**سُبْحَانَ رَبِّىَ الْعَظِيمِ**». وَفِى سُجُودِهِ «**سُبْحَانَ رَبِّىَ الأَعْلَى**». وَ مَا مَرَّ بِآيَةِ رَحْمَةٍ إِلاَّ وَقَفَ عِنْدَهَا فَسَأَلَ وَلاَ بِآيَةِ عَذَابٍ إِلاَّ وَقَفَ عِنْدَهَا فَتَعَوَّذَ

| فَكَانَ | مَعَ النَّبِيِّ | صَلَّى | أَنَّهُ | عَنْ حُذَيْفَةَ |
|---|---|---|---|---|
| இருந்தார் | நபியுடன் | தொழுதார் | நிச்சயமாக அவர் | ஹுதைஃபா மூலம் |

| مَا مَرَّ | وَفِى سُجُودِهِ | فِى رُكُوعِهِ | يَقُولُ |
|---|---|---|---|
| கடக்கமாட்டார் | அவருடைய சுஜூதிலும் | அவருடைய ருகூவில் | கூறுவார் |

| فَسَأَلَ | عِنْدَهَا | وَقَفَ | إِلاَّ | بِآيَةِ رَحْمَةٍ |
|---|---|---|---|---|
| வேண்டினார் | அதன் இடத்தில் | நிறுத்தினார் | தவிர | அருள் பற்றிய ஆயத் |

| فَتَعَوَّذَ | بِآيَةِ عَذَابٍ | وَ |
|---|---|---|
| பாதுகாப்புத் தேடினார் | வேதனையுடைய ஆயத் | இன்னும் |

ஹீதைஃபா (ரலி), நபி (ஸல்) அவர்களுடன் தொழுதார்கள் அப்போது (ஸல்) அவர்கள் தங்களின் ருகூவில் **சுப்ஹான ரப்பியல் அழீம்** என்றும் **சுஜூதில்** **சுப்ஹான ரப்பியல் அஃலா** என்றும் கூறுபவர்களாக இருந்தார்கள், அருள்பற்றிய ஆயத்தையோ வேதனை பற்றிய ஆயத்தையோ ஓதினால் அங்கு நிறுத்தி அருள் இடத்தில் அருளை வேண்டியும் வேதனை இடத்தில் வேதனையை விட்டும் பாதுகாப்புத் தேடிவிட்டுத்தான் மறு ஆயத்தை ஓதுவார்கள். ஹீதைஃபா (ரலி), அபூதாவூத், 871.

**سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمِ** - கண்ணியமிக்க எனது இறைவன் தூய்மையானவன்.

**سُبْحَانَ رَبِّيَ الأعلى** -உயர்வுமிக்க எனது இறைவன் தூய்மையானவன்

| سُبْحَان | رَبِّيَ | الْعَظِيْم | الأعلى |
|---|---|---|---|
| தூய்மையானவன் | எனது இறைவன் | கண்ணியமிக்கவன் | உயர்வுமிக்கவன் |

عَنْ عَائِشَةَ نَبَّأَتْ أَنَّ رَسُولَ اللَّهِ –صلى الله عليه وسلم– كَانَ يَقُولُ فِى رُكُوعِهِ وَسُجُودِهِ « سُبُّوحٌ قُدُّوسٌ رَبُّ الْمَلاَئِكَةِ وَالرُّوحِ

: நிச்சயமாக ரசூல் (ஸல்) அவர்கள் தங்களின் ருகூவிலும் சுஜூதிலும் **சுப்பூஹூன் குதூசுன்** என்று கூறுபவர்களாக இருந்தார்கள் என ஆயிஷா (ரலி. அறிவித்தார்கள்:), நூல்: முஸ்லிம்.1119

| عَنْ عَائِشَةَ | نَبَّأَتْ | أَنَّ | رَسُولَ اللَّهِ |
|---|---|---|---|
| ஆயிஷா மூலம் | அறிவித்தாள் | நிச்சயமாக | அல்லாஹ்வின் தூதர் |

| كَانَ | يَقُولُ | فِى رُكُوعِهِ | وَفِى سُجُودِهِ |
|---|---|---|---|
| இருந்தார் | கூறுவார் | அவருடைய ருகூவில் | அவருடைய சுஜூதிலும் |

سُبُّوحٌ قُدُّوسٌ رَبُّ الْمَلاَئِكَةِ وَالرُّوحِ –ரூஹ் (ஆன்மா) என்னும் ஜிப்ரீலுக்கும் ஏனைய வானவர்களுக்கும் இறைவனாகிய (அல்லாஹ்) தூய்மையானவன், பரிசுத்தமானவன்.

| سُبُّوحٌ | قُدُّوسٌ | رَبُّ | الْمَلاَئِكَةِ | وَالرُّوحِ |
|---|---|---|---|---|
| தூய்மையானவன் | **பரிசுத்தமானவன்** | **இறைவன்** | **வானவர்கள்** | **இன்னும் ஆன்மா** |

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ كَانَ النَّبِيُّ صلى الله عليه وسلم يَقُولُ فِي رُكُوعِهِ وَسُجُودِهِ سُبْحَانَكَ اللَّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللَّهُمَّ اغْفِرْ لِي

: நபி (ஸல்) அவர்கள் தங்களின் ருகூவிலும் சுஜூதிலும் சுப்ஹானகல்லாஹூம்ம ரப்பனா வபி ஹம்திக அல்லாஹூம்மக்ஃபிர் லீ என்று கூறுபவர்களாக இருந்தார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி), நூல்: புகாரி. 793

| عَنْ عَائِشَةَ | قَالَتْ | كَانَ |
|---|---|---|
| ஆயிஷா மூலம் | கூறினாள் | இருந்தார் |

| يَقُولُ | فِى رُكُوعِهِ | وَفِى سُجُودِهِ |
|---|---|---|
| கூறுவார் | அவருடைய ருகூவில் | அவருடைய சுஜூதிலும் |

سُبْحَانَكَ اللّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللَّهُمَّ اغْفِرْ لِي - எங்களின் இறைவனாகிய அல்லாஹ்வே! உன்னைப் புகழ்வதுடன் நீ தூய்மையானவன் என்று துதிக்கிறேன், இறைவா! என்னை மன்னித்தருள்!

| وَبِحَمْدِكَ | رَبَّنَا | اللَّهُمَّ | سُبْحَانَكَ |
|---|---|---|---|
| உன்னைப் புகழ்வதுடன் | எங்கள் இறைவா! | அல்லாஹ்வே! | நீ தூய்மையானவன் |

| لِي | اغْفِرْ | اللَّهُمَّ |
|---|---|---|
| எனக்கு | மன்னித்தருள்! | இறைவா! |

عن علي بن أبي طالب أن رسول الله صلى الله عليه و سلم كان إذا ركع قال اللهم لك ركعت ولك أسلمت وبك آمنت خشع لك سمعي وبصري وعظامي ومخي وعصبي

| كَانَ | رَسُولَ اللَّهِ | أَنَّ | عَنْ عَلِيٍّ |
|---|---|---|---|
| இருந்தார் | அல்லாஹ்வின் தூதர் | நிச்சயமாக | அலி மூலம் |

| قال | إذا ركع |
|---|---|
| கூறுவார் | அவர் ருகூவு செய்தால் |

: ரசூல் (ஸல்) அவர்கள் ருகூ செய்தால் **அல்லாஹும்ம லக ரக:து, வலக அஸ்லம்து, வபிக ஆமன்து, கஷஅ லக சம்யீ, வ பசரீ, வ இழாமீ, வமுக்கீ, வ அசபீ** என்று கூறுபவர்களாக இருந்தார்கள். அறிவிப்பவர்: அலி (ரலி), நூல்: நஸாஈ .1050.

اَللّهُمَّ لَكَ رَكَعْتُ وَلَكَ أَسْلَمْتُ وَبِكَ آمَنْتُ خَشَعَ لَكَ سَمْعِي وَبَصَرِيْ وَعِظَامِيْ وَمُخِّيْ وَعَصَبِيْ

- இறைவா! உனக்கே நான் ருகூவுச் செய்கிறேன், உனக்கே நான் பணிந்து விட்டேன், உன்னைக் கொண்டே நான் நம்பிக்கைக் கொண்டேன், உனக்கே எனது செவிப்புலனும், எனது பார்வையும், எனது எலும்புகளும், எனது மூளையும், எனது நரம்புகளும் பணிந்துவிட்டன.

முஸ்னத் அஹ்மத்தின் ஒரு அறிவிப்பில்: وَمَا اسْتَقَلَّتْ بِهِ قَدَمِي لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ என்றும் உள்ளது இன்னும் எனது பாதம் எதையெல்லாம் சுமந்து நிற்கிறதோ அவையும் அகிலங்களைப் படைத்த அல்லாஹ்வுக்குப் பணிந்துவிட்டன.

| أَسْلَمْتُ | وَلَكَ | رَكَعْتُ | لك | اَللّهُمَّ |
|---|---|---|---|---|
| நான் பணிந்தேன் | இன்னும் உனக்கு | நான் குனிந்தேன் | உனக்கு | இறைவா! |

| سَمْعِي | خَشَعَ | آمَنْتُ | وَبِكَ |
|---|---|---|---|

| | | | |
|---|---|---|---|
| எனது செவிப்புலன் | பணிந்தது | நான் நம்பினேன் | உன்னைக் கொண்டு |

| | | | |
|---|---|---|---|
| وَعَصَبِيْ | وَمُخِّيْ | وَعِظَامِيْ | وَبَصَرِيْ |
| எனது நரம்புகளும் | எனது மூளையும் | எனது எலும்புகளும் | எனது பார்வையும் |

| | | |
|---|---|---|
| لِلَّهِ | قَدَمِي | وَمَا اسْتَقَلَّتْ |
| அல்லாஹ்வுக்கு | எனது பாதம் | இன்னும் எதையெல்லாம் சுமந்தது |

| | |
|---|---|
| الْعَالَمِينَ | رَبِّ |
| அகிலங்கள் | படைத்துப் பாதுகாப்பவன் |

عَنِ ابْنِ أَبِي أَوْفَى قَالَ كَانَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم إِذَا رَفَعَ ظَهْرَهُ مِنَ الرُّكُوعِ قَالَ «سَمِعَ اللَّهُ لِمَنْ حَمِدَهُ اللَّهُمَّ رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْءَ السَّمَوَاتِ وَمِلْءَ الأَرْضِ وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ

| | | | |
|---|---|---|---|
| إِذَا رَفَعَ | رَسُولُ اللَّهِ | كَانَ | عَنِ ابْنِ أَبِي أَوْفَى |
| முதுகை உயர்த்தும்போது | அல்லாஹ்வின் தூதர் | இருந்தார் | இப்னு அபீ அவ்ஃபா மூலம் |

| | |
|---|---|
| قَالَ | مِنَ الرُّكُوعِ |
| கூறினார் | ருகூவிலிருந்து |

:ரசூல் (ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து தமது முதுகை உயர்த்தும்போது "சமிஅல்லாஹூ லிமன் ஹமிதா அல்லாஹூம்ம ரப்பனா லகல் ஹம்து மில்அஸ் ஸமாவாதி வல் அர்ழி வ மில்அ மா ஷிஃத மின் ஷையின் பஃது என்று கூறுபவர்களாக இருந்தார்கள். அறிவிப்பவர்: அலி (ரலி), நூல்: முஸ்லிம் .1095.

"அல்லாஹ் தன்னைப் புகழ்பவனைக் கேட்டுவிட்டான், எங்கள் இறைவனாகிய அல்லாஹ் வே! உனக்கே எல்லாப் புகழும் அதாவது வானங்கள் மற்றும் பூமி நிரம்ப புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே! மேலும் இதன் பின்னரும் எதையெல்லாம் நீ நாடுகிறாயோ அது நிரம்ப புகழ் அனைத்தும் உனக்கே!"

| | | | |
|---|---|---|---|
| رَبَّنَا | اللَّهُمَّ | لِمَنْ حَمِدَهُ | سَمِعَ اللَّهُ |
| எங்கள் இறைவன் | அல்லாஹ்வே! | தன்னைப் புகழ்பவனை | அல்லாஹ் கேட்டுவிட்டான் |

| | | | | |
|---|---|---|---|---|
| وَ | السَّمَوَاتِ | مِلْءَ | الْحَمْدُ | لَكَ |
| இன்னும் | வானங்கள் | நிரம்ப | எல்லாப் புகழும் | உனக்கே |

| بَعْدُ | مِنْ شَىْءٍ | مَا شِئْتَ | الأَرْضِ |
|---|---|---|---|
| பின்னர் | வஸ்துவிலிருந்து ன் | நீ நாடிய | பூமி |

عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ قَالَ كَانَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم إِذَا رَفَعَ رَأْسَهُ مِنَ الرُّكُوعِ قَالَ « **رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْءَ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَىْءٍ بَعْدُ أَهْلَ الثَّنَاءِ وَالْمَجْدِ أَحَقُّ مَا قَالَ الْعَبْدُ وَكُلُّنَا لَكَ عَبْدٌ اللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلاَ مُعْطِىَ لِمَا مَنَعْتَ وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدّ.**

ரசூல் (ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து தமது தலையை உயர்த்தும்போது "ரப்பனா லகல் ஹம்து மில்அஸ்ஸ மாவாதி வல் அர்ழி வ மில்அ மா ஷி:த மின் ஷையின் ப:து அஹ்லஸ் ஸனாயி வல் மஜ்தி அஹக்கு மா காலல் அப்து வகுல் லுனா லக அப்துன் அல்லா ஹூம்ம லா மானிஅ லிமா அ:தைத்த வலா மு:திய லிமா மன:த வ லா யன்:பவு தல் ஜத்தி மின்கல் ஜத்து" என்று கூறுபவர்களாக இருந்தார்கள். அறிவிப்பவர்: அலி (ரலி), நூல்: முஸ்லிம் .1099.

| إِذَا رَفَعَ | رَسُولُ اللَّهِ | كَانَ | عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ |
|---|---|---|---|
| உயர்த்தும் போது | அல்லாஹ்வின் தூதர் | இருந்தார் | அபீ சயீதில் குத்ரி மூலம் |

| قَالَ | مِنَ الرُّكُوعِ | رَأْسَهُ |
|---|---|---|
| கூறினார் | ருகூவிலிருந்து | தமது தலை |

"புகழுக்கும் கண்ணியத்திற்கும் உரியவனே! அடியான் கூறுவதற்கு மிகத் தகுதி - நாங்கள் அனை வரும் உனக்கு அடிமைகளாக இருக்கும் நிலையில்- இறைவா! நீ கொடுப்பதை தடுத்து நிறுத்து பவர் எவரும் இல்லை, நீ தடுத்ததை கொடுப்பவர் எவரும் இல்லை, கண்ணியம் உடைய எவ ரும் (சுயமாக)பயன் பெறமுடியாது உன்னிடத்திலேயே கண்ணியம் இருக்கிறது.

| الْعَبْدُ& عَبْدٌ | مَا قَالَ | أَحَقُّ | وَ الْمَجْدِ | أَهْلَ الثَّنَاءِ |
|---|---|---|---|---|
| அடிமை | கூறுவதற்கு | மிகத் தகுதி | கண்ணியத்திற்கும் | புகழுக்கு உரியவன் |

| لاَ مَانِعَ | لَكَ | وَكُلُّنَا |
|---|---|---|
| தடுத்து நிறுத்துபவர் எவரும் இல்லை | உனக்கு | நாங்கள் அனைவரும் |

| لِمَا مَنَعْتَ | وَلاَ مُعْطِىَ | لِمَا أَعْطَيْتَ | اللَّهُمَّ |
|---|---|---|---|
| நீதடுத்ததை | கொடுப்பவர் இல்லை | நீ கொடுத்தை | இறைவா! |

| | | | |
|---|---|---|---|
| وَلاَ يَنْفَعُ | ذَا الْجَدِّ | مِنْكَ | الْجَدُّ |
| பயன் பெறமுடியாது | கண்ணியம் உடைய | உன்னிடத்திலிருக்கிறது | கண்ணியம் |

عَنْ رِفَاعَةَ بْنِ رَافِعٍ الزُّرَقِيِّ قَالَ كُنَّا يَوْمًا نُصَلِّي وَرَاءَ النَّبِيِّ فَلَمَّا رَفَعَ رَأْسَهُ مِنَ الرَّكْعَةِ قَالَ سَمِعَ اللَّهُ لِمَنْ حَمِدَهُ قَالَ رَجُلٌ وَرَاءَهُ "رَبَّنَا وَلَكَ الْحَمْدُ حَمْدًا كَثِيرًا طَيِّبًا مُبَارَكًا فِيهِ" فَلَمَّا انْصَرَفَ قَالَ : مَنِ الْمُتَكَلِّمُ ؟ قَالَ : أَنَا ، قَالَ : رَأَيْتُ بِضْعَةً وَثَلاَثِينَ مَلَكًا يَبْتَدِرُونَهَا أَيُّهُمْ يَكْتُبُهَا أَوَّلُ.بخاري٧٩٩.

:ஒரு நாள் நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் தொழுது கொண்டிருந்தோம், (ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து தமது தலையை உயர்த்திய சமிஅல்லாஹூ லிமன் ஹமிதா என்று கூறிய போது, அவர்களுக்குப் பின்னால் ஒருவர் "ரப்பனா வலகல் ஹம்து ஹம்தன் கதீரன் தய் யிபன் முபாரகன் ஃபீஹி" என்று கூறினார், (ஸல்) அவர்கள் தொழுது முடித்துத் திரும்பியதும் இப்படிச் சொன்னவர் யார்? என்று கேட்க ஒருவர் நான் என்றார், முப்பது சொச்ச மலக்குகள் இதை முதலில் பதிவு செய்வது யார் என்று போட்டி போட்டுக் கொண்டிருப்பதை நான் கண் டேன் என்று (ஸல்) அவர்கள் கூறியதாக ரிஃபாஆ பின் ராஃபிஃ கூறினார், நூல்: புகாரி 799.

| | | | | |
|---|---|---|---|---|
| عَنْ رِفَاعَةَ بْنِ رَافِعٍ الزُّرَقِيِّ | قَالَ | كُنَّا | يَوْمًا | نُصَلِّي |
| ரிஃபாஆ பின் ராஃபிஃ மூலம் | கூறினார் | இருந்தோம் | ஒரு நாள் | தொழுதோம் |

| | | | |
|---|---|---|---|
| وَرَاءَ النَّبِيِّ | فَلَمَّا رَفَعَ | رَأْسَهُ | مِنَ الرَّكْعَةِ |
| நபிக்குப் பின்னால் | உயர்த்திய போது | தமது தலை | ருகூவிலிருந்து |

| | | | | |
|---|---|---|---|---|
| قَالَ | سَمِعَ اللَّهُ | لِمَنْ حَمِدَهُ | قَالَ | رَجُلٌ |
| கூறினார் | அல்லாஹ் கேட்டான் | அவனைப் புகழ்ந்தவனை | கூறினார் | ஒரு மனிதர் |

| | | | | |
|---|---|---|---|---|
| وَرَاءَهُ | رَبَّنَا | وَلَكَ | الْحَمْدُ حَمْدًا | كَثِيرًا |
| அவருக்குப் பின்னால் | எங்கள் இறைவா! | உனக்கே | புகழ் | அதிகம் |

| | | | | |
|---|---|---|---|---|
| طَيِّبًا | مُبَارَكًا | فِيهِ | فَلَمَّا انْصَرَفَ | مَنِ |
| தூய்மையானது | அருள் மிக்கது | அதில் | திரும்பியபோது | யார்? |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| الْمُتَكَلِّمُ ؟ | أَنَا | رَأَيْتُ | بِضْعَةً | وَثَلاَثِينَ | مَلَكًا |
| பேசியவர் | நான் | நான் கண்டேன் | சொச்சம் | முப்பது | வானவர் |

| | | | |
|---|---|---|---|
| يَبْتَدِرُونَهَا | أَيُّهُمْ | يَكْتُبُهَا | أَوَّلُ |
| அதில் போட்டி போடுகிறார்கள் | அவர்களில் யார் | இதனை பதிவு செய்வது | முதலில் |

